# ஸ்ரீராமாநுஜன் 160.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 14 | 1962 ஏப்ரல்மீ சுபக்ருத்ஸு சித்திரைமீ | ஸஞ்சிகை 4, 5.


## திருவாய்மொழி நூற்றந்தாதி–49.

மாநலத்தால் மாறன் திருவல்ல வாழ்புகப்போய் *
தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில் * – மேல்நலங்கித்
துன்பமுற்றுச் சொன்ன சொலவுகற்பார் தங்களுக்கு *
பின்பிறக்க வேண்டா பிற.

| | | | |
|---|---|---|---|
| மாறன் தான் | நம்மாழ்வார் | துன்பம் உற்று சொன்ன | வருந்தி யருளிச் செய்த |
| மா நலத்தால் | மிகுந்த பிரேமத்தோடே | சொலவு | ஸ்ரீ ஸூக்திகளை |
| திரு வல்லவாழ் புக போய் | திருவல்லவாழிலே சென்று சேரப் புறப்பட்டு | கற்பார் தங்களுக்கு | கற்குமவர்களுக்கு |
| அவ் ஊர் தன் அருகில் | அத்தலத்தின் ஸமீபத்தில் | பின் | இனிமேலும் |
| இளைத்து வீழ்ந்து | தளர்ந்து விழுந்து | பிற | வேறு பிறப்புக்கள் |
| மேல் | அதற்கு மேலே | பிறக்க வேண்டா | பிறக்க வேண்டியிராது. [முக்திஸாம்ராஜ்யம் பெறலாகுமென்கை.] |
| நலங்கி | (தோழிமாருடைய நிஷேத வசனங்களாலும்) நலிவுபட்டு | | |

* * *—திருக்குடந்தையிலே தம்முடைய மநோரத ஸித்திபெறாத ஆழ்வார் திருவல்லவாழ்ப்பதியிலாவது சென்று களிப்போமென்று அங்கேறச் செல்லப் புறப்பட்டு, முட்ட முடியப்போகப் பெறாமே புறச்சோலையளவிலேயே தளர்ந்து விழுந்து ஆற்றாமை கரைபுரண்டு அருளிச் செய்ததாம் *மானேய் நோக்குப் பதிகம்; இதனைக் கற்பார்களுக்கு இனியொருநாளும் பிறவித் துன்பம் நேராமே பேரின்பமெய்தலாகும் என்றதாயிற்று.

*மானேய்நோக்குத் திருவாய்மொழிக்குக் கீழ்த் திருவாய்மொழியான *ஆராவமுதே யென்னும் பதிகத்தில் ஆழ்வாரடைந்த தளர்ச்சி அபரிமிதமாயிருந்தது. அங்கு நின்றும் திருவுள்ளத்தை மீட்டுத் திருவல்லவாழென்கிற மலைநாட்டுத் திருப்பதியிலே செல்லவிட்டு அங்கேறப் போக வொருப்பட்டு அங்குப் போகவும் முடியாமே அவ்வூர்க்கு அருகிலிருந்த வூரில் சோலைகளும் அங்குள்ள பரிமளத்தைக் கொய்துகொண்டு புறப்படுகிற தென்றலும் வண்டுகளின் இனிதான மிடற்றோசைகளும் வைதிகாநுஷ்டான கோலாஹலங்களும் மற்றுமுண்டான ஸம்பிரமங்களுமெல்லாம் தம்மை மிகவும் நலிய, அவற்றாலுண்டான நோவுபாட்டைத் தோழிமாரைக் குறித்துத் தலைவி சொல்லும் பாசுரமாகப் பேசியது *மானேய் நோக்குப் பதிகம்.

## தமிழ் வேதாந்த மணித்திரள்

"எத்திற முரலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே!"

கண்ணன் அடிக்கடி வெண்ணெய் களவு செய்கிறானென்பதை யுணர்ந்த யசோதைப் பிராட்டி அவன் கைப்படும்போது கட்டியடிப்பதற்காகக் கயிறுகளை ஆங்காங்கு ஒளித்து வைத்திருப்பள். கண்ணன் அதையறிந்து, தான் களவு செய்யத் தொடங்குவதற்கு முன்னே அக்கயிறுகளைச் சிறிதுசிறிதாக அறுத்து வைத்திடுவன். இவனுடைய லீலைகளில் இதுவுமொரு லீலையென்று கொள்க. களவு செய்துவிட்டு ஒருவர்க்கும் பிடிகொடாமல் ஓடிப்போகக் கூடிய ஆற்றல் அவனுக்கு உண்டாதலால் அப்படி யோடிச்சென்று ஒளிந்து கிடப்பதும் சில சமயங்களிலுண்டு. வேணுமென்றே அகப்பட்டுப் பிடிபட்டு நிற்பதுமுண்டு. அடியுண்டு ஆப்புண்டு அழுதுநிற்கும் பெருங்குணத்தை வெளியிட நினைத்திருக்குமவன் பிடிகொடாமல் ஓடிப்போவது எதற்காகவென்று கேள்வி வரும். அதைப் பற்றின மருமத்தை மற்றொரு கால் விவரிப்போம். ததிபாண்டன் போல்வார்க்கு மோக்ஷங் கொடுத்துப் பரத்துவத்தை வெளியிடுவதற்காகவே ஓடிப்போவதென்று இப்போது சுருக்கமாகக் கொள்க.

ஓடிச்செல்ல மாட்டாமல் பிடிபட்ட காலத்திலே யசோதையானவள் கண்ணனை ஒரு கையால் பற்றிக்கொண்டு மற்றொரு கையினால், சிலவிடங்களில் தான் மறைத்து வைத்திருந்த கயிறுகளை யெடுப்பள்; எடுத்தவாறே அவை சிறிது சிறிதாகத் துண்டிக்கப்பட்டிருப்பதைக் காண்பள்; இது கண்ணன் செய்த சேஷ்டையென்றும் அறிந்துகொள்வள். அதனாலும சீற்றம் மிகும் அவளுக்கு. 'பயலே! இன்று உன்னைக் கட்டியடிக்காமல் விடுகிறேனா பார்' என்று சொல்லிக்கொண்டே, துண்டு துண்டாயிருந்த அக்கயிறுகளை ஒரு கையினாலேயே வருந்தி முடி போடத் தொடங்கி ஒரு கயிறு வடிவமாக்கி அவனைக் கட்டப் புகுவள்; இரண்டு மூன்று சுற்று கட்டுவதற்குப் போரும்படியான அக்கயிறு ஒரு சுற்றுக்கும் போராதபடியாகத் தன்னுடலைப் பெருக்கடிப்பன் மாயக்கண்ணன்;

"பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்" (திருச்சந்த விருத்தம்) என்று திருமழிசைப்பிரான் அருளிச் செய்தபடியே, தன் திருமேனியை எவ்வளவும் பெருக்கிக்கொள்ள சக்தியுண்டே யவனுக்கு. அப்படி பெருக்கிக்கொண்டபோது கட்ட முடியாமற்போக, யசோதையானவள் 'இவ்வளவு சிரமப்பட்டும் இவனைக் கட்டிப்போட முடியவில்லையே' என வருந்தி இன்று விட்டுத் தொலைப்போமென்று நினைத்தவளவிலே, கண்ணன் கட்டுண்டு கிடந்து வெளியிட நினைத்த திருக்குணத்தை நாம் இழந்துவிடுவதா! என்று நினைத்து, உடனே ஒரு சுற்றுக்குப் போராத அக்கயிறு மூன்று நான்கு சுற்றுக்குப் போரும்படி தன்னுடலை நொடிப்பொழுதில் சுருக்கிக்கொண்டான். அதனால் ஒருரலோடே சேர்த்துப் பிணைத்துக் கட்டிவிட்டாள். 'வல்லையேல் இக்கட்டை யறுத்துக்கொண்டு போ, பார்ப்போம்' என்று சொல்லி (யசோதை) தன் வீட்டு வேலைகளிலே அமர்ந்தாள். கண்ணபிரானே வென்னில் உரலோடு கட்டுண்டிருந்து ஏங்கியிருக்கின்றான். இது என்றைக்கோ நிகழ்ந்த நிகழ்ச்சியாயினும், இந்த சரிதை ஆழ்வார்க்குத் திருக்கண் முன்னே உலாவுகின்றது. ஸமகாலத்திற்போலே கண்டு துடிக்கிறார். கட்கண்ணாற் காண்பதிற் காட்டிலும் நெஞ்சென்னு முட்கண்ணாற் காண்பது சீரியதாதலாலும், ஆழ்வாருடைய அகக்கண்ணுக்குப் புலப்படாதது எதுவுமில்லையாகையாலும், இதனைக் கண்டு "எத்திறம்! உரலினோடு இணைந்திருந்தேங்கிய

எளிவே!'' என்று கூறி ஆறு மாதமளவும் மேற்பாசுரம் சொல்லத் தொடங்க மாட்டாமல் அப்படியே மூர்ச்சித்திருந்தாரென்று ஸம்பிரதாயம் வல்ல பெரியோர் கூறுவர். ஆசார்ய ஹ்ருதயத்தில் ''மூவாறு மாஸம் மோஹித்து'' என்றருளிச் செய்ததில் முதலாறு மாஸம் மோஹித்திருந்தவிடம் இது காணீர்

ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவனான எம்பெருமான் இவ்விருள் தருமா ஞாலத்தில் வந்து பிறந்து எல்லாருடைய கண்ணுக்கும் புலப்படுவதே ஒரு ஸௌலப்யம்; அதற்கு மேல் இப்படி கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாயிருப்பது ஸௌலப்யத்திற்கு எல்லை நிலமாகும். ஆழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் ''க்ஷிதௌ தேஷு ஸமுஹோஹவந ஹவாந உதயூதாம் யதிஜநாரம்பஜா ! ஸுலபநாத தக், உலூகவதெக்கியதாஜபஸ ஜதிகிம் தஜாஜ ஜூஃ'' என்ற ச்லோகத்தினால் இவ்விரண்டு ஸௌலப்யத்தையும் அநுஸந்தித்து விஸ்மிதரானார்.

இந்த சரித்திரத்தைத் திருமங்கையாழ்வார் சிறிய திருமடலிலே கல்லும் கரையும்படியான இனிய பாடல்களாலே பேசியுள்ளார்:—

''...ஆங்கொரு நாள் ஆய்ப்பாடி *சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர் வாய்*
வாரார் வன முலையாள் மத்தாரப்பற்றிக்கொண்டு. ஏராரிடை நோவ எத்தனையோர் போதுமாய்*
சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை. வேரார் நுதல் மடவாள் வேறோர்கலத்திட்டு*
நாராருறியேற்றி நன்கமைய வைத்ததனை. *பாரார்வேற்கண்மடவாள்போந்தனையும்பொய்யுறக்கம்*
ஓராதவன் போலுறங்கி யறிவுற்று. தாரார் தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டி*
ஆராத வெண்ணெய் விழுங்கி; அருகிருந்த மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே*
ஓராதவன் போல் கிடந்தானைக் கண்டவளும். வாராத்தான் வைத்ததுகாணாள்* வயிறடித்திங்கு
ஆரார் புகுதுவார் ஐயரிவரல்லால். நீராமிது செய்தீரென்றோர் நெடுங்கயிற்றால்*
ஊரார்களெல்லாருங் காணவுரலோடே. தீரா வெகுளியளாய்ச் சிக்கன வார்த்தடிப்ப*
ஆராவயிற்றினோடாற்றாதான்...'' என்று.

இந்த சரிதையில் பக்தர்கள் ஆராய்ந்து அறியவேண்டியது ஒன்றே; கண்ணனைத் தாம்பினால் கட்டினது யசோதையா? அல்லது கண்ணன் தானே தன்னைக் கட்டும்படி செய்துகொண்டானா வென்று ஆராயுமளவில், ''ஸம்ஸாரபந்தஸ்திதி மோக்ஷஹேது:'' என்கிறபடியே, உலகம் முழுவதையும் ஸம்ஸாரபந்தத்திலே கட்டுண்டிருக்கச் செய்யவல்லவனான பெருமானை ஓர் அபலை கட்டினாளென்பது நம்புதற்குரியதாகாது; இப்படிப்பட்ட ஸௌலப்ய குணத்திலே ஆழ்வார்போன்ற சிலர் ஈடுபட்டு உருகவேணுமென்று கருதிய அவன், தானே தன்னைக் கட்டுமாறு செய்துகொண்டானென்பதே உண்மை. இந்த மருமத்தை மதுரகவியாழ்வாரொருவரே நன்கு காட்டியுள்ளார்; அவ்வாழ்வார் எம்பெருமானிடத்திலீடுபடாதே நம்மாழ்வாரிடத்திலீடுபட்டு அவரையே தெய்வமாகக் கொண்டவரென்பது உலகமறிந்தது, அன்னவர், நம்மாழ்வார் விஷயமாக வொரு சிறுபிரபந்தம் பேசத்தொடங்கும்போது நம்மாழ்வாருடைய திருவுள்ளவுகப்புக்காகக் கண்ணபிரானை ஆஸ்தாநிக்கின்றார்; அதில் ''கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயனென்னப்பன்'' என்கிறார்; தாம்பினால் கட்டுண்ட பெருமாயன்'' என்னாமல் ''கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்'' என்றது குறிக்கொள்ளத் தக்கது. தன்னைத்தானே கட்டுவித்துக்கொண்டவனென்பதன்றோ பொருள்.

ஓரிடத்தில் தேசாந்தரிகளுக்குச் சாப்பாடு போடப்படுகிறது; அதற்குச் சீட்டு கொடுப்பதென்று வைத்து. சீட்டு பெற்றவர்களையே உள்ளே விடவேண்டுமென்று நிபந்தனை செய்யப்பட்டிருந்தது. ஒருவன் சீட்டு பெறாமலே தன்னுடைய சாதுரியத்தினால் எப்படியோ

உள்ளே நுழைந்துவிட்டான்; வீட்டுக்களைப் பரிசோதிக்கிற சமயத்தில் இவன் சீட்டில்லாமலே உள்ளே வந்திருக்கிறுனென்பதை யறிந்துகொண்ட அதிகாரி, "உன்னை யார் உள்ளே விட்டது?" என்று கேட்க, "என்னை நானே விட்டுக்கொண்டேன்" என்றுனும். அதுகேட்டு அனைவரும் சிரிக்கின்றுர்கள். அங்குச் சிரிப்புக்கு மாத்திரம் விஷயமுள்ளதே யல்லது ஈடுபட்டு உருகுவதற்கு எள்ளளவும் விஷயமில்லை. இங்கு அதுதான் விசேஷம்.

திருமங்கையாழ்வார் இந்த சரிதைக்கு ஆச்சரியமாக ஒரு பதிகமும் பாடுகிருர். [பெரிய திருமொழியில் பத்தாம் பத்தில் ஆருவது பதிகம்.] "அவன் காண்மின் இன்று ஆய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே" என்று பாட்டுத்தோறும் இதுவே ஈற்றடியாக வைக்கப்பட்டது. ஒவ்வொரு பாசுரத்திலும் மூன்றடிகளால் அவனது பரத்துவம் பொலியும்படியான உயர்ந்த சரிதைகளைப் பேசி "அப்படிப்பட்ட பராத்பரன் இன்று வெண்ணெயுண்டு உரலோடு ஆப்புண்டு கிடக்கிருன் காண்மின்" என்று வியந்து பேசினவிது பரத்துவத்தையும் சேர்த்து அநுபவிக்கிற பாங்கு.

இந்த சரிதையை யநுபவிக்கின்ற கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "ப்ரேமஜ யசோதாமபரிணமஜ்ஜஷா பபாஸ" என்றுர். அதாவது, யசோதைப்பிராட்டியினுடைய பிரேமமே தாமமாக (தாம்பாக) வடிவெடுத்ததென்றதாயிற்று. பிரேமமே தாம்பாக வடிவெடுத்ததென்றுல் என்ன கருத்து? என்னில்: "தோய்த்த தண்தயிர் வெண்ணெய் பாலுடனுண்டலும் உடன்று ஆய்ச்சிகண்டு ஆர்த்த தோளுடையெம்பிரான்" என்று குலசேகராழ்வாருர், "தீரா வெகுளியளாய்ச் சிக்கனவார்த்து அடிப்ப" என்று திருமங்கையாழ்வாரும் ......... இங்ஙனே மற்றும் பலரும் யசோதைப்பிராட்டி சீற்றத்தினுல் கண்ணனைக் கட்டியடித்ததாகச் சொல்லியிருந்தாலும் அஃது உண்மையன்று; உலக நடைக்காக அங்ஙனே சொல்லிற்றத்தனை; ஸாக்ஷாத் பரமபுருஷன் *மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயனுயிருந்து வைத்து எனக்கு மகனாக வந்து தோன்றி எனக்கு ஸர்வாத்மநா விதேயனுயிருப்பதே! இந்த பெருங்குணத்தை நானொருத்தியேயோ அனுபவித்துப் போவது! உலகமெல்லாம் இதனையநுபவித்து உருக வேண்டாவா என்று நெஞ்சு கனிந்து கட்டியடித்தாளென்றவாறு.

எம்பெருமான் கட்டுண்டு அடியுண்டதும் அழுதேங்கியிருந்ததும் மாயச் செயலென்பது ஆழ்வாருக்குத் தெரியாதா? நமக்கே தெரிந்திருக்கும்போது ஸர்வஜ்ஞரான ஆழ்வாருக்கு எப்படி தெரியாமலிருக்கும்? தெரிந்ததாகில் இந்த மாயச் செய்கையில் ஈடுபட்டு உருகவேண்டியதுண்டோ? என்று சில அரஸிகர்கள் நினைப்பர்கள். இதைப்பற்றி நம்மாழ்வாரே மேலே (5—10—2.) *அதுவிதுவுது என்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்* என்றருளிச் செய்கிருர். எம்பெருமானுடைய செயல் என்பதொன்றே போதும் அன்பர்கள் உருகுவதற்கு. "ஊமிதம் நிரிக்ஷிதம் அதாவகமாஹ்வஹ்ஹுதம் திவ்யம் காமூ" என்றுர் ஆழ்வானும்.

குலசேகராழ்வாருடைய திவ்ய ஸூக்திகளில் (பெருமாள் திருமொழியில் 7-8)* முழுதும் வெண்ணெயளைந்து தொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும், எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கெள்கு நிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும், அழுகையுமஞ்சி நோக்குமந் நோக்குமணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையு மிவைகண்ட வசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே* என்னும் பாசுரம் கல்லையும் கரைக்கவல்லது. அழுவதோடு நிற்காமல் தொழுவதும் செய்தானும்; "தாயே! இனி நான் வெண்ணெயினரு

கும் செல்லுவேனல்லேன்; இந்த விசை என்னை மன்னித்துவிடு" என்று சொல்லித் தொழு தானும். குன்றனைய குற்றங்களைச் செய்தவர்கள் தொழுதவாறே தனக்குச் சீற்றம் தணியு மியல்பு தன்னிடத்துக் கண்டதொன்றுதலால் தானும் தொழத் தொடங்கினன் போலும்; "உலகமெல்லாம் தன்னைத் தொழும்படி நின்ற தெய்வம் நமக்கு மகனாகத் தோன்றினதுமல் லாமல் நம்மைத் தொழுவதுஞ் செய்யா நின்றதே" யென்று உருகினாள் யசோதை. அதை யெல்லாம் நினைத்து நம்மாழ்வார் எத்திறம் என்று மோஹித்தாராயிற்று.

மோஹித்திருந்த வாழ்வாரை உணர்த்தினவர் யாருமிலர்; 'காலமுணர்த்த வுணருவது' என்று ஒன்றுண்டே; அந்த ரீதியில் தாமாகவுணர்ந்தார்; உணர்ந்து, அருகேயிருந்த மதுர கவிகள் போல்வாரை 'என்ன சொன்னேன்?' என்று வினவினார்; நிகழ்ந்த செய்தியைச் சொன்னால் மறுபடியும் மோஹிப்பரென்றெண்ணின அவர்கள். *"பத்துடையடியவர்க்கெளி யவன்* என்று சொல்லிற்று" என்றார்கள். அதற்கு ஆழ்வார், 'அப்படியா சொன்னேன்? அப்படிச் சொல்லத் தகாது, மாற்றிச் சொல்லுகிறேன்' என்று, அடுத்த பாசுரம் தொடங்கு கிறார்.—'எளிவருமியல்வினன்' என்று. பக்தர்களுக் கெளியவனென்றால் இதில் என்ன விசே ஷம்; எளிமையையே இயல்வாகவுடையவனென்று கொள்ளுங்கள் என்றாராயிற்று.

## ரஹஸ்யார்த்த விசேஷ விசிந்தனம்

விஷ்ணு மந்த்ரம், வாஸுதேவ மந்த்ரம், நாராயண மந்த்ரம் என மூன்று மந்த்ரங்களே பகவானுடைய மற்றெல்லா மந்த்ரங்களிற்காட்டிலும் சிறந்தவை. இம்மூன்றினுள்ளும் நாரா யண மந்த்ரமே மிகச் சிறந்தது. விஷ்ணு மந்த்ரமானது ஆறெழுத்துடையதாகும். வாஸு தேவ மந்த்ரமானது பன்னிரண்டெழுத்துடையதாகும். நாராயண மந்த்ரமானது எட்டெ ழுத்துடையதாகும். இதனையே அஷ்டாக்ஷர மஹா மந்த்ரமென்பர். இதன் பெருமையையே ஆழ்வார்கள் "எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே" என்பது முதலான பல பல பாசுரங்களினால் வெளியிட்டுள்ளார்கள். இந்த மந்த்ரத்தில் முதற்பகுதி (ஓம்) என்னும் ப்ரணவம். அகாரம், உகாரம், மகாரம் ஆகிய மூன்றெழுத்துக்கள் சேர்ந்து (ஓம்) என்று ஓரே எழுத்தாயிற்று. ஸகல ஜகத்துக்கும் காரண பூதனும் ஸர்வரக்ஷகனுமான எம்பெருமா னைச் சொல்லுகிறது அகாரம். எம்பெருமான் ஸ்ரீ மஹாலக்ஷ்மியோடு கூடியிருந்தே ரக்ஷணத் தொழிலை நடத்தவல்லவனாதலால் இவ்வகாரத்திலே பிராட்டியையும் சேர்த்து அநுஸந்திக்க வேணுமென்பது நூற்கொள்கை. அகாரத்தின்மேல் நான்காம் வேற்றுமையுருபு ஏறியிருந்து அது வேதத்திற்கு உரிய இலக்கணத்தினால் லோபமடைந்துவிட்டது. அதன் பொருள் உரிமைப்பட்டிருத்தல் (சேஷத்வம்) ஆகும். மூன்றாவதான எழுத்தாகிய மகாரத்திற்கு அறிவுள் ளவனான [சேதனனாகிய] ஜீவாத்மா அர்த்தமாதலால், ஜீவாத்ம ராசிகளெல்லாம் பகவானுக் கும் பிராட்டிக்கும் சேஷப்பட்டவை என்றதாயிற்று. இடையில் இருக்கின்ற உகாரத்தின் பொருள் யாதெனில்: வடமொழியில் அவதாரணப் பொருள் எனப்படும். தமிழில் பிரிநிலைப் பொருளெனப்படும். ஸ்ரீமந்நாராயணனொருவனுக்குத் தவிர மற்ற எவர்க்கும் சேஷப்பட்ட வனல்லன் என்றதாகத் தேறிற்று. உலகில் ஒருவனுக்கு உரியவனானவன் மற்றும் பலர்க்கும்

உரிமைப்பட்டிருத்தலைக் காணுகின்றோம். இங்கு அப்படியல்லாமல் நாராயணனுக்கு சேஷப்பட்டவன் நாராயணனுக்கேயன்றி மற்றொருவற்கும் சேஷப்பட்டவனல்லன் என்றதாயிற்று. இது தான் உகாரத்தில் தேறின பொருள். ஆக, ப்ரணவத்தினால் எம்பெருமானுக்கே உரிமைப்பட்ட தன்மையும் பிறர்க்கும் தனக்கும் உரிமைப்படாத தன்மையும் சொல்லிற்றாயிற்று.

இனிமேல் (நம:) என்பதும் (நாராயணாய) என்பதும் நிற்கிறது. இவற்றுக்கு மந்த்ர சேஷமென்று பெயர். இதனால் கீழ்ப் ப்ரணவத்தில் (ஓம் என்றதில்) சொன்ன பொருளே விவரிக்கப்படுகிறது. (நம:) என்பதனால் விரோதி கழிக்கப்படுகிறது. மூன்று வகையான விரோதிகள் அறியத்தக்கன. ஸ்வரூப விரோதியென்றும் உபாய விரோதியென்றும் புருஷார்த்த விரோதியென்றும் விரோதிகள் மூவகைப்படும். அஹங்கார மமகாரங்களோடு கூடியிருக்கும் நிலை ஸ்வரூப விரோதியெனப்படும். அந்த நிலையை ஆழ்வார் "யானே யென்னை யறியகிலாதே யானே யென்றனதே யென்றிருந்தேன்" என்ற பாசுரத்தினால் அநுஸந்தித்துக்காட்டினார். இந்த விரோதி கழிந்த நிலையை "யானே நீ என்னுடைமையும் நீயே" என்ற பாசுரத்தினால் காட்டியருளினார்.

இனி, தன்னைக் காப்பாற்றிக் கொள்ளத் தான் முயற்சி செய்கை உபாய விரோதியெனப்படும். அது கழிந்த நிலையை ஆழ்வார் "களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்" என்ற பாசுரத்தினால் காட்டினார். நமது துன்பத்தை எம்பெருமான் தீர்த்தாலும் தீர்க்காவிட்டாலும் ஒருவிதமான முயற்சியையும் செய்யகில்லோம் என்றிருக்கையே உபாய விரோதி கழிந்த நிலையாகும். இனி புருஷார்த்த விரோதியாவது, பலனை யனுபவிக்கும்போது அதனால் தான் ஆனந்தப்படுகை. அது இவனுக்குத் தகாது. அந்த ஆனந்தம் எம்பெருமானுடையதே யென்று கொண்டிருக்கை புருஷார்த்த விரோதி கழிந்த நிலையாகும். ஆக, இம்மூன்று விரோதிகளின் கழிவும் (நம:) என்னுமதில் தெரிவிக்கப்படும்.

இனி (நம:) என்றவதின் ஆழ் பொருள் விவரிக்கப்படுகின்றது.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பகவானுக்கு சேஷப்பட்டிருப்பதிற் காட்டிலும் பாகவதர்களுக்கு சேஷப்பட்டிருத்தல் மிகச் சிறந்ததாகக் குலாவப்படுகிறது. திருமங்கையாழ்வார் "மற்றுமோர் தெய்வமுள தென்றிருப்பாரோடுற்றிலேன், உற்றது முன்னடியார்க் கடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும் கற்று நான், கண்ணபுரத்துறை யம்மானே" [பெரிய திருமொழி 8–10–3] என்றருளிச் செய்துள்ள பாசுரத்தையே முக்கியமான பிரமாணமாகக்கொண்டு பாகவத சேஷத்வத்தைத் திருமந்திரத்திற்குத் தலையான பொருளாகக் கூறுவர் பேராசிரியர்கள். இதில் எந்த எழுத்தினால் (அல்லது) எந்த பதத்தினால் பாகவத சேஷத்வம் தெரிவிக்கப்படுகிறதென்று ஆராயவேண்டும். ஒன்றினாலும் தெரிவிக்கப்படவில்லையென்றே நினைக்கக்கூடியதாயிருக்கும். அப்படியில்லை. ப்ரணவத்தில் அகாரத்திலே இதை யநுஸந்திப்பாருளர். எங்ஙனே யென்னில்: அகாரத்தின்மேல் சதுர்த்தீ விபக்தி [நான்காம் வேற்றுமையுருபு] ஏறிக் கழிந்திருப்பதாக (லோபித்திருப்பதாக) ஆசாரியர்களின் நிரூபணம். லுப்த சதுர்த்தியோடு கூடின அந்த அகாரத்தினால் பகவானுக்கு சேஷப்படுந் தன்மை தெரிவிக்கப்பட்டதன்றோ. பாகவத சேஷத்வ மென்பது பகவத் சேஷத்வத்தின் எல்லைநிலமே யாதலால் அந்த அகாரத்திற்குப் பொருளுரைக்கும்போதே இதையும் சேர்த்துப் பொருளாக வுரைத்திடுவர்கள்.

வேறு சிலர், அந்த அகாரத்திற்கு அடுத்த உகாரத்திலேயும் பாகவத சேஷத்வத்தை யநுஸந்திப்பர்கள். எங்ஙனே யென்னில்: உகாரத்தினுல் பகவானுக்குத் தவிர மற்றையோர்கட்கு சேஷப்பட்டவனல்லன் என்பது [அநந்யார்ஹத்வம்] தெரிவிக்கப்படுகிறதல்லவா? பாகவதர்கள் பகவானுடைய திருவடிஸ்தானத்திலேயே சேர்ந்தவர்களாகையாலே, உகாரத்தின் பொருளை அநுஸந்திக்கும்போதே இந்த பாகவத சேஷத்வத்தையும் சேர்த்து அநுஸந்திப்பர்களென்றதாயிற்று. ஆக விப்படி ப்ரணவத்திற்குள்ளேயே பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கத் தக்கதாயிருந்தாலும் இடையிலுள்ள (நம:) என்னும் பதத்திலே இதனை யநுஸந்திப்பது மிகவும் பொருத்தமானதென்று பேராசிரியர்களின் திருவுள்ளம். எனென்னில்: அஹங்கார மமகாரங்களை அறவே விட்டுத் தொலைத்தவர்களுக்கே பாகவத சேஷத்வம் ருசிக்கும். நமச்சப்தார்த்தம் ஊறஆற அஹங்கார மமகாரங்கள் அறவே நீங்குமாதலால், இங்ஙனம் நீங்கப்பெற்ற அதிகாரிகளுக்கே பாகவத சேஷத்வம் உறைத்திருக்குமென்று கொண்டு நம் ஆசார்யர்கள் பாகவத சேஷத்வத்தை (நம:) என்பதிலே அநுஸந்திக்கும்படி நியமித்தருளினது மிகப் பொருத்தமானது.

பாகவத சேஷத்வம் என்பதன் உண்மை ஸ்வரூபத்தை யறியாதார் பலர் இதில் ஆக்ஷேபங்களைச் செய்து கொண்டிருப்பர்கள்; பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கக் கடமைப்பட்டிருக்கின்ற நாம் வேறு சில வழிப்போக்கர்களுக்கு அடிமைப்படுகையாவது என்? ப்ரணவத்தில் உகாரத்தினுல் உறுதி செய்யப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வத்தோடு முரண்பட்டதன்றோ இது; இதைத் திருமந்திரார்த்தமாகக்கொள்வது எப்படி சேரும்? என்று ஆக்ஷேபிப்பதுண்டு. அன்னவர்களைத் தெளிவிக்கிறோம். ஒரு வஸ்துவிலே நாம் அன்பு வைத்தால் அவ்வன்பு அந்தவொரு வஸ்துவோடு முடிந்து நிற்பதில்லை; அத்தோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமும் பரம்பரா ஸம்பந்தமும் பெற்ற வஸ்துக்களிலேயும் அன்பு பரந்து செல்லா நின்றது. மனைவியினிடத்திலே கணவன் வைக்கிற அன்பு அவளோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றவர்களிடத்தும் பெருகிச் செல்வதை எங்கும் காண்கின்றோம். எம்பெருமானும் நம்மிடத்திலே வைக்கிற அன்பு நம்பளவிலே நிற்காமல் "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழு பிறப்பும் மாசதிரிது பெற்று" என்று ஆழ்வார் அருளிச்செய்கிறபடியே நம்மோடு உறவு பெற்றோரிடத்திலும் பெருகிச் செல்வதை இதிஹாஸ புராணகதைகளினுலுமறிகிறோம். இவ்விதமாகவே நம்முடைய அன்பும் எம்பெருமானளவிலே சுவறிப் போகாமல் அடியாரடியார் தம்மடியாரடியார் தமக்கடியாரடியார் பக்கலிலும் பெருகிச் சென்றால் இது பகவத் பக்தியின் உறைப்பேயொழிய வேறன்று. ஆக, பாகவத பக்தியென்பது பகவத்பக்தியின் ஒரு காஷ்டையே யொழிய வேறுபட்டதன்று என்றதாயிற்று. இதில் செய்யும் ஆக்ஷேபங்கள் இதன் உண்மையை உணராதார் செய்யுமவை யத்தனை யென்று விடுக்க.

இனி (நம:) என்பதற்கு அடுத்ததான நாராயண பதத்திற்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. நார—அயந என்று இரண்டு பதங்கள் சேர்ந்து நாராயண என்றாகிறது. நாரங்களுக்கு அயநமாயிருப்பவன் நாராயணன். நித்ய வஸ்துக்களின் திரள்களுக்கு ஆதாரமாயிருப்பவனென்றபடி. நாராயணன் நித்ய வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருந்தால் அநித்ய வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருப்பவன் யாவன்? என்று கேள்வி பிறக்கும்; கேண்மின்: வேதாந்த ஸித்தாந்தத்தில் அநித்ய வஸ்துவே கிடையாது; எல்லாம் நித்ய வஸ்துக்களே யாகும். அழிந்தொழியும் பொருள்களை நாம் கட்கூடாகக் காணுநிற்க, அநித்ய வஸ்துவே கிடையாதென்றால் எப்படி

பொருந்துமென்று கேள்வி பிறக்கும். இங்குத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமாவது, நித்ய வஸ்துக்கள் இருவகைப்படும்; ஸ்வரூப நித்யமென்றும், ப்ரவாஹ நித்யமென்றும்; எப்போதும் எவ்விதத்தாலும் அழிவில்லாத பொருள்கள் ஸ்வரூபநித்ய மெனப்படும். ஆன்மா, மூலப்ரக்ருதி, காலம் முதலானவை இந்த வகுப்பிற் சேர்ந்தவை. இனி ப்ரவாஹ நித்ய வஸ்துக்கள் எவையென்னில்: உற்பத்தியையும் விநாசத்தையு முடையனவாக இருக்கச் செய்தேயும் முன்னிருந்த நாமம் உருவம் லிங்கம் முதலானவற்றின் மாறுபாடின்றிக்கேயிருக்கப்பெற்ற பொருள்கள் ப்ரவாஹ நித்யங்களெனப்படும். பஞ்ச பூதங்களின் விகாரப் பொருள்களாக உலகிற் காணப்படுகின்ற செடி கொடி மரம் பானை துணி முதலான ஸகல வஸ்துக்களும் ப்ரவாஹ நித்யங்களாம். ஒரு பானை உடைந்து போனாலும் அதே விதமான பல பானைகளை எஞ்ஞான்றும் காணுகின்றோம்; ஒரு துணி கிழிந்துபோனாலும் அதே விதமான பல துணிகளை எந்நாளும் பார்க்கின்றோம். இங்ஙனே ஒவ்வொரு பொருளின் விஷயத்திலும் கண்டுகொள்ளலாம்.

அன்றியும், வேதாந்திகளின் மதத்தில் ஒரு வஸ்துவுக்கும் புதிதாக உற்பத்தியும் அழிவும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. ஒரு அவஸ்தையிலிருந்து மற்றோரவஸ்தைக்கு மாறுவதே உற்பத்தியாகும். அந்த நிலைமையினின்று மற்றோர் நிலைமைக்கு வருவதே விநாசமாகும்; ஆக ஸூக்ஷ்மாவஸ்தைக்கும் ஸ்தூலாவஸ்தைக்கும் மாறிமாறி வருவதே உற்பத்தி விநாசங்களாகையாலே இந்த வகையில் எல்லாப் பொருள்களையும் நித்யங்களென்று கொள்ளக் குறையில்லை. நாராயண னென்பதற்குப் பொருளருளிச் செய்யா நின்ற பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியில் "நாராயணனென்றது, நாரங்களுக்கு அயந மென்றபடி; நாரங்களாவன நித்ய வஸ்துக்களினுடைய திரள்" என்று பணித்து உடனே அந்த நித்ய வஸ்துக்களை விவரிக்கத் தொடங்கி, "அவையாவன—ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும்....பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும் நித்யஸூரிகளும்....ப்ரக்ருதியும் பத்தாத்மாக்களும்...அண்டங்களும் அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்" என்று அருளிச் செய்தார். இதனால் விண்ணுலகிலும் மண்ணுலகிலும் ஒரு பொருளையும் விடாமல் எல்லாமும் நாரமென்னுஞ் சொல்லுக்குப் பொருளாகச் சொல்லிற்றாயிற்று. இப்பொருள்களுக்கெல்லாம் ஆதாரமாயிருப்பவன் நாராயணன்.

பகவான் இப்பொருள்களிலே யிருக்கின்றானா? அல்லது இப்பொருள்கள் பகவானிடத்து இருக்கின்றனவா? என்று பார்க்குமளவில், இரண்டு வகைக்கும் குறையில்லையென்றே நூற்கள் கூறுகின்றன. எல்லாப் பொருள்களிலும் பகவானுளன்; எல்லாப் பொருள்களும் பகவானிடத்து உள்ளன என்பதே நூற்கொள்கை. பகவானிடத்துள்ள பரத்துவம் ஸௌலப்யம் என்கிற இரண்டு திருக்குணங்களும் மேற்கூறிய இருவகைப் பொருள்களினாலும் விளக்கம் பெற்றனவாகும். எங்ஙனே யென்னில்: எல்லாப் பொருள்களும் பகவானிடத்தே யுள்ளன வென்னும்போது எல்லாப் பொருள்களுக்கும் தான் ஆதாரமாயிருக்கையாகிற பரத்துவம் விளங்கிற்றாம். எல்லாப் பொருள்களிலும் பகவானுளன் என்னும் போது அறப் பெரியனான தான் ஸகல சேதநாசேதநங்களிலும் தன்னை அமைத்துக்கொண்டு புகுந்திருக்கையாகிற ஸௌலப்யம் [எளிமை] விளங்கிற்றாகும். ஆக நாராயண பதத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று.

இனி நாராயண பதத்தின் மேலுள்ள நான்காம் வேற்றுமையின் பொருளாவது, கைங்கர்ய ப்ரார்த்தனை யென்பர். அதாவது, நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப்பெறு

வேணுக வேணுமென்று கோரப்படுகிற தென்கை. எவ்விதமான கைங்கர்யம் செய்யவேணும்? அது எப்போது செய்யவேணும்? என்கிற கேள்விக்கு இடமில்லை; ஸகல தேசங்களிலும் ஸகல காலங்களிலும் ஸகலாவஸ்தைகளிலும் ஸகலவிதமான கைங்கர்யங்களையும் செய்வதற்கே இட்டுப் பிறந்தோம் நாம். இதனை நம்மாழ்வார் "ஒழிவில் காலமெல்லா முடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்" என்கிற பாசுரத்தினல் தெளிவித்துள்ளார்.

கைங்கரியம் செய்வது மனமொழி மெய்களாலும் பொருளாலுமாகக் கூடியது. இவற்றுள் மனத்தினுலும் வாக்கினுலும் கைங்கரியம் செய்வதில் அருமையில்லை. உடலைச் சிரமப்படுத்தி அடிமை செய்வது அரிது, அதுதான் முக்கியமானது. பொருளைச் செலவு செய்து கைங்கரியம் செய்வதுதான் மிகச் சிறந்ததென்று சிலர் நினைக்கக் கூடும். அது மிகத் தாழ்ந்த தென்பதை நிரூபிக்கிறேம் காண்மின்; ஒருவன் தவறு செய்து ராஜ தண்டனைக்கு உட்படுகிருன்; அரசன், ஒரு மாதம் கடுங்காவல், அல்லது ஆயிரம் ரூபாய் அபராதம் என்று விதித்தால் எப்படிப்பட்ட ஏழையும் சிரமப்பட்டாகிலும் பணத்தைச் செலுத்தப் பார்க்கிறுனே யொழிய, தேஹத்தை நலிவுறுத்தக் கூசி சிறைவாஸத்திற்கு உடன்படுவதில்லை. இதனுல் அனைவர்க்கும் தேஹத்திலே தான் அதிகமான அன்பு என்றும், பொருளில் அன்பு குறைவுடையதென்றும் கண்டுகொள்கிறேமல்லவா? நாம் எதை அதிகமாக அபிமானிக்கிறேமோ அதைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கர்யமே சிறந்ததாகுமென்பதில் தட்டில்லை. ஆகவே, திரவியத்தைக்கொண்டு செய்யும் பணிவிடையிற்காட்டிலும் உடலைக்கொண்டு செய்யும் பணிவிடையே சீரிய தென்று தேறுகின்றது. கோவில்களில் எம்பெருமானுக்குத் திருத்தேர்த் திருவிழா நடைபெறுகின்றது; திருத்தேரை யிழுக்க வாருங்கள் என்றழைத்தால், பத்தெட்டு ரூபாயைக் கொடுத்துக் கைகூப்பி நிற்கும் அதிகாரிகளே மலிந்துள்ளார்கள். உடலைச் சிரமப்படுத்திக் கைங்கர்யம் செய்வோமென்று குதூஹலிப்பவர்கள் மிகச் சிலரே. அத்தகைய கைங்கர்யமே எம்பெருமானுக்குப் பரம ப்ரீதியை விளைக்கும். இங்கு ஒன்று கேட்கலாம்; ஒருவற்குப் பணிவிடை செய்வதென்பது உலகில் கிலேசமாகக் காணப்படுகிறதே யொழிய ஆனந்தமாகக் காணப்படவில்லை. "ஸேவா ஶ்வவ்ருத்தி ராக்க்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்" என்று மநு மஹர்ஷியும் கூறியுள்ளார்; இதன் பொருளாவது, பணிவிடை செய்வதென்பது நாய்த்தொழிலாதலால் அதனை விட்டுவிடவேண்டு மென்பதாம். ஆனந்தமயனை ஆன்மா ஆனந்தஹேதுவான செயல்களைச் செய்து ஆனந்தப்பட வேண்டியிருக்க, கிலேசத்திற்கே ஹேதுவான பணிவிடையைச்செய்து வருந்தலாமோ வென்பர். இதற்கு ஸமாதானம் கேண்மின்: உலகிற் பணிவிடைகள் இரண்டு வகையாக வுண்டு. தேஹபோஷணத்திற்காகப் பணிவிடை செய்வது ஒன்று; ஆத்மானந்தத்திற்காகப் பணிவிடை செய்வது மற்றென்று.

இவற்றுள் முந்தின பணிவிடையினுல் கிலேசம் விளையுமே யல்லது பிந்தின பணிவிடையினுல் சிறிதும் கிலேசம் விளையாது; பரமானந்தமே கொந்தளிக்கும். சிஷ்யன் ஆசார்யனுக்குச் செய்யும் பணிவிடைகளையும் காமுகன் காமினிக்குச் செய்யும் பணிவிடைகளையும் பார்க்கிறேம். இவை வெகு மகிழ்ச்சியுடன் நடைபெறுகின்றன வென்பதை உலகிற் காண்கிறேம்.

துஷ்யந்த மஹாராஜன் வேட்டையாடிக்கொண்டு செல்லும்போது ஒரு மஹர்ஷியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்தான்: அங்கே சகுந்தலை யென்னும் தெய்வமாதைக் கண்டு காதல் கொண்டான்; அவளோடு ஸம்பாஷிக்கவும் பெற்ருன்; அப்போது சொல்லுகிருன்:—

"ஸம்வீஜயாமி நளிநீதள தாளவ்ருந்தை:, அங்கே நிதாய கரபோரு! யதாஸுகம் தே ஸம் வாஹயாமி சரணவுத பத்மதாம்ரௌ" என்கிறான்; சகுந்தலையின் முகத்தில் வேர்வை நீர் பெருகுவதைக் கண்டு அரசன் பொறுக்கமாட்டிற்றிலன்; தாமரையிலையை விசிறியாகக் கொண்டு விசிறட்டுமா? உன்னுடைய பாதபல்லவங்களை மடியிலே ஏறிட்டுக்கொண்டு நோவு தீர வருடட்டுமா? என்று கேட்கிறான்; கேட்டுக்கொண்டே அப் பணிவிடைகளையும் செய்கி றான். இவனோ சக்ரவர்த்தி; அவளோ ஒரு காட்டுப் பெண், காதல் விளைந்ததே காரணமாகக் கைங்கர்யம் செய்வதில் அன்பு ததும்பிய குதூஹலம் விளைகின்றது. இதனால் என்ன தெரிந்துகொள்ளுகிறோம்; உகப்பில்லாதவிடத்தில் செய்யநேரும் பணிவிடையே துக்க ரூபமா னதென்றும், உகப்புள்ளவிடத்தே செய்ய ப்ராப்தமாகும் கைங்கர்யமானது ஆனந்தமய மாகவே யிருக்குமென்றும் தெரிந்துகொள்ளுகிறோம்.

ஆகவே எம்பெருமானிடத்தில் ஸ்வரூபத்தாலும் திருக்குணங்களடியாகவும் உகப்புக் கொண்டவர்களுக்கு கைங்கர்யம் ருசித்திருக்குமே யொழிய க்லேச ரூபமென்று வெறுக்கத் தக்கதாயிராதென்று தெரிந்துகொள்ளுகிறோம். இவ்விஷயத்தைப் பிள்ளை லோகாசார்யர் எவ் வளவு அழகாகத் தெரிவித்தருளுகிறார் பாருங்கள்— "சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட் டில் காண்கிறதென்னில்; அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்பது அவ்வாசார்யசிகாமணியின் திவ்யஸூக்தி. வேதார்த்த ஸங்க்ரஹமென்னும் நூலின் முடிவில் ஸ்வாமி ராமாநுஜர் தாமும் அருளிச்செய்த அர்த்தமிது. கைங்கர்ய ப்ரார்த்தனை செய்வது ஸ்வரூபாநுரூபமே யாதலால் *நாராயணாய வென்பதனால் அது செய்யப்படுவதில் குறையொன்றுமில்லை யென்க. ஆக இவ்வளவாலும் திருமந்திரப் பொருள் விளக்கப்பட்டதாயிற்று. .... ... ...

---

## உயர்ந்த பரிசளிப்பு

சென்ற விதழில் **சங்கத்தமிழ்மாலை முப்பது** என்னும் நூலை வெளியிட்டிருந்தோம். "இதை ஆழ்ந்து நோக்கி வாசித்தோமென்று தெரிவிப்பவர்களுக்கு உயர்ந்த பரிசளிக்கப்படும்" என்றும் முகப்பில் வெளியிட்டிருந்தோம். இதை யாதரித்துப் பல ரஸிகர்களும் பண்டிதர் களும் அந்நூலை ஆழ்ந்து வாசித்ததையும், தாம் தாம் பலபல விடங்களில் ரஸித்ததையும் நமக் குத் தெரிவித்திருந்தார்கள். "அபூர்வமான இந்நூலை நாங்கள் பெற்றதே எங்களுக்குச் சிறந்த பரிசாதலால் வேறு வகையான பரிசை நாங்கள் விரும்பவில்லை, எதிர்பார்க்கவுமில்லை" என்றும் க்ருதஜ்ஞதை ஸங்கேதர்கள் போலப் பலர் எழுதியிருந்தார்கள்.

திருவரங்கம் பெரியகோயிலில் மணவாளமாமுனிகள் ஸன்னிதி ஆதீனக்காரரும், ஆங் கிலத்திலும் தமிழிலும் உயர்ந்த பரீக்ஷைகளில் தேர்ச்சி பெற்றவருமான ஸ்ரீமான் உ. வே. கோமடம் ஸம்பத்குமாராசாரியரென்பவர் மிகவும் ஸாஹஸமான வொரு பரீக்ஷை கொடுத்தா ரிதில். 14–3–62 தேதி முதல் 30–3–62 தேதி வரை இங்கு நம்மில்லத்தில் நடந்த ஜன்மநக்ஷ த்ர விசேஷ கோஷ்டியின் ஸம்பந்தமான வித்வத்ஸதஸ்ஸுக்கு 24–3–62-ல் அவர் நேராக எழுந்தருளியிருந்து சங்கத்தமிழ்மாலை முப்பதில் தாம் பட்டபரிச்ரமத்தை ஸதஸ்யர்களுக்கு அற்புதமாகக் காட்டினார். அந்நூல் முழுவதையும் இவர் ஓரெழுத்து விடாமல் எப்படியோ நிரர்கமாகச் சொல்லும்படி கண்டபாடம் செய்துவிட்டார். "இது மஹத்தான ஸாஹ ஸம்" என்று ஒவ்வொருவரும் வியந்து கூறும்படி அவ்வக்ஷராசிகளையே உபந்யாஸ வர்ஷமா

கப் பொழிந்தார். அவர் இதை இரண்டு வேளை உபந்யஸித்தும் எழெட்டு மாலைகளையே உபந்யஸித்தாரானார். அவருடைய யாராஜ்ஞஸௌக்தியும் ஞாபகசக்திகளும் மிகமிக வியக்கத்தக்கனவாயிருந்தன. இவர்க்கு நூறு ரூபா விலையுள்ள நமது பதிப்புப் புத்தகங்கள் இவருடைய விருப்பத்திற்குத் தக்கபடி பரிசளிக்கப்பட்டன. "இவருடைய ஸக்தி விசேஷத்திற்கு எவ்வளவு பரிசளித்தாலும் போதாது" என்றே ஸதஸ்யர்கள் ஒருமிடறாக வுகந்துரைத்தார்கள்.

---



ஸ்ரீமதுபயவே. வித்வான். பஹுகுடும்பி வரதாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

ராஜமன்னார் ஸன்னிதிக்கடுத்த சேனங்குளத்தில் திருவவதரித்து, வானமாமலையில் மடத்து ஆஸ்தான வித்வானாக எழுந்தருளியிருந்த அழகப்பங்கார் ஸ்வாமி பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களும் அத்யாத்மசாஸ்த்ரங்களும் அதிகரித்து ப்ரவசநநிபுணராய் விளங்கி, திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் பல ஸம்வத்ஸரங்கள் உபயவேதாந்த ரஹஸ்ய ப்ரவசனங்கள் செய்துபோந்த ஸ்ரீ. உ. வே. பஹுகுடும்பி, வரதாசார்யஸ்வாமியின் பகவத்விஷய சாத்துமுறை கோஷ்டியிது. (28 ஆண்டுகட்கு முற்பட்டது.) அந்த ஸ்வாமியின் பக்கத்தில் தீக்ஷையோடு ஸேவை ஸாதிப்பவர் திருநாராயணபுரம் ஸ்ரீ. உ. வே. தி. அ. கோவிந்தப்பங்கார் ஸ்வாமி.

கப் பொழிந்தார். அவர் இதை இரண்டு வேளை உபந்யஸித்தும் ஏழெட்டு மாலைகளையே உபந்யஸித்தாரானார். அவருடைய யாஜ்ஞஸக்தியும் ஜெயாவ்ருத்திகளும் மிகமிக வியக்கத்தக்கனவாயிருந்தன. இவர்க்கு நூறு ரூபா விலையுள்ள நமது பதிப்புப் புத்தகங்கள் இவருடைய விருப்பத்திற்குத் தக்கபடி பரிசளிக்கப்பட்டன. "இவருடைய ஸக்தி விசேஷத்திற்கு எவ்வளவு பரிசளித்தாலும் போதாது" என்றே ஸதஸ்யர்கள் ஒருமிடறாக உகந்துரைத்தார்கள்.

---



**ஸ்ரீமதுபயவே. வித்வான். பஹுகுடும்பி வரதாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)**

ராஜமன்னார் ஸன்னிதிக்கடுத்த சேனங்குளத்தில் திருவவதரித்து, வானமாமலையில் மடத்து ஆஸ்தான வித்வானாக எழுந்தருளியிருந்த அழகப்பங்கார் ஸ்வாமி பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களும் அத்யாத்ம சாஸ்த்ரங்களும் அதிகரித்து ப்ரவசந நிபுணராய் விளங்கி, திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் பல ஸம்வத்ஸரங்கள் உபயவேதாந்த ரஹஸ்ய ப்ரவசனங்கள் செய்துபோந்த ஸ்ரீ. உ. வே. பஹுகுடும்பி, வரதாசார்யஸ்வாமியின் பகவத்விஷய சாத்துமுறை கோஷ்டியிது. (28 ஆண்டுகட்கு முற்பட்டது.) அந்த ஸ்வாமியின் பக்கத்தில் தீக்ஷையோடு ஸேவை ஸாதிப்பவர் திருநாராயணபுரம் ஸ்ரீ. உ. வே. தி. அ. கோவிந்தப்பங்கார் ஸ்வாமி.

ஸ்ரீரஸ்து

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீபெரும்பூதூர் ஸ்வாமியுத்ஸவ
# உபயகோஷ்டி விளம்பரப் பத்திரிகை.

## சுபக்ருத் ஞு 1962

"ஆழ்வார்கள் தாங்க ளவதரித்த நாள்களிலும்
வாழ்வான நாள்நமக்கு மண்ணுலகீர்—ஏழ்பாரு
முய்ய வெதிராச ருதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவா திரை"

நாளது சுபகிருத் ஞு சித்திரை மீ 16ம் தேதியன்று ஞாயிற்றுக்கிழமை (29—4—62) ஸ்ரீபெரும்பூதூரில் எம்பெருமானுர் மஹோத்ஸவத் தொடக்கம். சித்திரை மீ 25உ செவ்வாய்க் கிழமையன்று (8—5—62) சாத்துமுறை; மறுநாள் கந்தப்பொடி வஸந்தம்.

29—4—62 முதல் 9—5—62 வரை 11 நாள் நடக்கும் இம்மஹோத்ஸவத்தில் திவ்ய ப்ரபந்த கோஷ்டியும் வேதபாராயண கோஷ்டியும் வெளியூர்களிலிருந்து ஸ்வாமிகளை வரவழைத்துச் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிற விஷயம் யாவருமறிந்ததே. இந்த பொறுப்பை காஞ்சீபுரம் ஸ்ரீ. உ. வே. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகள் பரமகிருபையுடன் ஏற்றுக்கொண்டு ஷை உத்ஸவ தினங்களில் அவ்விடத்திலேயே எழுந்தருளியிருந்து சிறப்பாக நடப்பித்து வருகிற விஷயமும் உலகப் பிரசித்தமானதே. உபயகோஷ்டியிலும் அந்வயிக்கிற ஸ்வாமிகளுக்கு ஸமர்ப்பிக்கவேண்டிய ஸம்பாவனைக்கு பக்த பாகவதோத்தமர்களின் உதவியையே நாடவேண்டியதாகிறது. சென்ற 2 வருஷங்களிலும் பக்த பாகவதர்கள் உதவி செய்தே ஸ்வாமிகளுக்கு ஸம்பாவனை செய்யப்பட்டது. அது ஸம்பந்தமான வரவு செலவுகள் அச்சிடப்பட்டிருக்கின்றன.

இக் கைங்கர்யத்திற்காகப் பொருள் ஸமர்ப்பிக்குமவர்கள் சென்ற வருஷங்களிற் போலவே காஞ்சீபுரம் ஸ்ரீ. உ. வே. P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளிடமே ஸமர்ப்பிக்கும்படி தேவஸ்தான தர்மகர்த்தாக்களாகிய கீழே கையொப்பமிட்ட நாங்கள் கேட்டுக் கொள்ளுகிறோம்.

இப்படிக்கு,

ஷை தேவஸ்தான தர்மகர்த்தாக்கள்.

**C. பக்தவத்ஸல நாயுடு,**
ரிடைர்ட், டிஸ்டிரிக்ட் ஜட்ஜ், மதராஸ்.

**M. D. ராமஜீ ரெட்டியார்.**

**ராமசாமி நாயுடு** அவர்கள்.

27—4—62 தேதியிலிருந்து
மணியார்டர் அனுப்ப விலாசம்:-

**P. B. அண்ணங்கராசாரியர்,**
C/o Post Master, Sriperumbudur,
(Chingleput Dt.) 10–4–62.

# இராவணனுடைய ஆசாரியர்கள்

பிடித்த பிடி விடாமையில் மூர்க்கனும் முதலையும் ஒரு வகுப்பு என்கிறார்கள். மூர்க்கனுக்கு உலகமெல்லாங்கூடி உபதேசஞ் செய்தாலும், சிறிதும் பயன்படுவதில்லை. இராவணனுக்கு எத்தனை பேர்கள் இதமுரைத்தனர்? எவ்வெவ்விதமாக உபதேசங்கள் தந்தனர்? அதன் பலன் என்னாயிற்று என்பது உலகுக்குத் தெரிந்திருந்தாலும் விசதமாக ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. ரஸிகர் களிக்க.

1. *இராமபிரான் கரதூஷணாதி வதம் செய்து முடித்தவுடனே அகம்பனன் ஜனஸ்தானத்தினின்றும் இலங்கைக்குச் சென்று இராவணனுக்குச் செய்தி கூற, அவன் துயரமும் கோபமுமுற்றுத் தன் தேரின் மேலேறித் தண்டகாரணியத்தில் வசிக்கும் தாடகா புத்திரனை மாரீசனிருப்பிடம் வந்தான். மாரீசனால் முறைப்படி மரியாதை செய்யப்பெற்றவவன் அகம்பனனிடத்தில் தான் கேள்விப்பட்ட செய்திகளைக் கூறி, இராமனுக்குத் தீங்கு விளைவிக்கத் தான் வந்திருப்பதாகச் சொல்லி, அதற்கு நீ துணைபுரிய வேண்டுமென்றான். உடனே மாரீசன் அவனுக்கு இதமுரைக்கத் தொடங்கினன். "அப்பா ராவணா! உனக்கு இந்த துர்ப்புத்தியை யுண்டாக்கினவன் யாவன்? உனக்கு நண்பன் போலவிருந்து உண்மையிற் பகைவனாகி உன்னைக் குடும்பத்தோடுங் கெடுக்க நினைத்து உனக்கு இந்த துர்ப்புத்தியை விளைத்தவன் யாவன்? உன்னுடைய மேன்மைகளைப் பொறுக்கமுடியாமல் உன்னையும் அரக்கர் குலத்தையும் அடியோடு பாழாக்கவெண்ணியே இப்படிப்பட்ட விபரீத புத்தியை எவனோ உனக்கு உண்டாக்கிவிட்டான். அவனைப் பரம சத்துருவென்று நீ நினைக்க வேண்டுமே. ராவணா! இராமனுடைய பெருமையை நீ அறியாய். ராக்ஷஸ வேட்டையாடுவதில் நிகரற்ற பராக்ரமசாலியான ராமனாகிற சிங்கத்தை நீ வலுவில் சென்று சண்டைக் கிழுத்தாயாகில் நீயும், ராக்ஷச குலமும் பூண்டற்றுப்போய் யமன் வாயில் விழவேநேரும். லங்கேச்வரா! நீ மனத் தெளிவுபெற்று லங்கைக்குத் திரும்பிச்சென்று மறுபடியும் இத்தகைய துர்ப்புத்தி சிறிதும் உண்டாகப்பெறாமல் இனிது வாழ்வாயாக!" என்று கல்லும் கரையும்படி இதமான சொற்களைச் சொல்லிப் போக விட்டனன்.*

2. *இங்ஙனே இதமுரைக்கப்பெற்ற இராவணன் இலங்கைக்கு மீண்டு சென்றபின் அங்குவந்து சேர்ந்த சூர்ப்பணகையின் சொற்களால் மனந் திரியப்பெற்று, மறுபடியும் மாரீசனிடமே ஓடிவந்து பழையபடியே தன்னெண்ணத்தைக் கூறி இதற்கு நீ துணைபுரிந்தே யாகவேணும் என்று மிகவும் நிர்ப்பந்தித்தான். அப்போது மீண்டும் மாரீசன் மிக விரிவாக ஹிதோபதேசஞ் செய்தனன். "அரக்கர் தலைவனே! நீ சாரர்களையனுப்பிச் சத்துருக்களின் பலாபலங்களைத் தெரிந்துகொள்ளவில்லை; இராமன் சௌர்யவீர்ய பராக்ரமநிதி யென்பதையும், தேவாதி தேவனென்பதையும் நீ தெரிந்துகொள்ளவில்லை. ஐயோ! உனக்கேன் இப்படி விபரீத புத்தியுண்டாயிற்று? நீ நினைக்கிறபடி இராமனிடத்தில் ஹேயகுணம் சிறிதுமில்லையே; அவன் ஸமஸ்தகல்யாண குணக்கடல் காண். அரக்கர் குலத்தை வேரோடு பிடுங்கியழிக்கும் வல்லமை வாய்ந்த இராமனிடம் அபசாரபுத்தி கொள்ளாதே. இராமனது பராக்கிரமமும், தேஜஸ்ஸும் அளவிட முடியாதவை. எரிகிற நெருப்பை அணுக நினைப்பதுமுண்டோ? உனக்கு உயிரின்மேல் பற்றிருக்குமாகில், இன்பமாக இன்னமும் வாழவேணுமென்றிருப்பாயாகில் இராமனுக்குக் கெடுதிசெய்ய நெஞ்சிலும் நினையாதே. எதிர்த் தலையிலுள்ள சக்தி விசேஷங்களை உள்ளபடி தெரிந்துகொள்ள உனக்கு சக்தியில்லையே. அவ்விராமனிடம் நான் பட்ட பாடுகளை நெஞ்சால் நினைக்கும்போதும் உடல் நடுங்குகின்றதப்பா! இராமனுக்கு*

எள்ளளவும் தீங்குசெய்ய நினைத்தல் தகாது. என் பேச்சை மீறி நடந்தாயாகில் உனக்குக் கேடு விளைந்தேதீரும். ராவணா! எங்குப் பார்த்தாலும் எனக்கு ராம மயமாகவே காண்கிறது. பலவாயிரம் ராமமூர்த்திகளைக் காண்பதுபோலுள்ளதப்பா. அவ்விராமனது அம்புகளினின்று நான் எப்படியோ தப்பிப் பிழைத்து இனி ஒருகாலும் அப் பெருமானிடத்து அபசாரப் படலாகாதென்று உறுதிகொண்டு தவக்கோலம் பூண்டு காலங்கழித்து வருகிறேனப்பா. நான் எப்பொழுதும் ராமனை நினைத்தே திகில்பட்டுக்கொண்டிருப்பதால் "ர" என்னுமெழுத்தை முதலிற்கொண்ட ரத்னம், ரதம் முதலான பேர்களுங்கூட எனக்குப் பயத்தை விளைவிக்கின்றனகாண். அவ்விராமனது பிரபாவம் என்னொருவனுக்கே தெரியும். நீ உயிரோடிருக்க விரும்புவாயாயின் இராமனது பிரஸ்தாவத்தையுங்கூட என்னிடம் செய்ய வேண்டா. எங்கும் ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லுவார் பலர் கிடைப்பர்கள்; அப்ரியமாயும் ஹிதமாயுமுள்ள பேச்சைச் சொல்லுவாருமிலர், கேட்பாருமிலர். நான் சொல்லும் ஹிதம் உன் நெஞ்சிற் படவில்லையே. ராவணா! நீ ராமனுடன் விரோதப்படுவாயாயின் நிச்சயமாக உன் பந்துமித்திரர்களுடன் மாண்டுபோவாய். ஐயோ! ராக்ஷச வீரர்கள் ராமபாணங்களால் அடியுண்டு தரையில் வீழ்வதை நீ காணப்போகின்றனை; லங்காபுரம் முழுதும் ராமபாணங்களால் சூழப்பட்டு அக்கினிச் சுவாலைகள் நாற்புறமும் நிரம்பப்பெற்று வீடுகளெல்லாம் நீறுகப்போவதை நீ காணப்போகின்றனை. [இத்யாதிகள் மாரீசோபதேசங்கள்.]

3. மாரீசனுடைய உபதேசத்திற் கடுத்தபடி பிராட்டியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. இதுவும் பல தடவைகளில் கிடைத்தது. சிலவுபதேசங்கள் கேண்மின்; ராவணா! ராமன் ஆகாசத்திலுள்ள சந்திரனைக் கீழே விழத்தள்ளவும், கடல் முழுவதையும் வற்றச் செய்யவும் வல்லவன். உனக்கு ஆயுள் முடிந்துவிட்டதனாலேயே அவரிடத்தில் பகையுண்டாயிற்றுனக்கு; உனது லங்காபுரி விரைவில் விதவையாகப்போகின்றபடியால்தான் இராமனைப் பலவாறு இகழ்ந்து பேசுகின்றாய்; மஹாதேஜஸ்வியும் தைவ சக்தி வாய்ந்தவனுமான இராமன் கரதூஷணாதிகளான பதினாலாயிரம் ராக்ஷசர்களை அவலீலையாகப் பொடிபடுத்தினவன் காண்; அந்த ரகு குல ராமன் உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களையும் ஒரு நொடிப் பொழுதில் வதைக்க வல்லவன் காண். (இது ஆரணியகாண்ட வுபதேசம்; இனி ஸுந்தரகாண்ட வுபதேசம்.) இராவணா! இவ்விலங்கா புரியில் எல்லாச் சரக்குகளையும் கொண்டு சேர்த்து வைக்கின்றனையே, உனக்கு நல்ல வுபதேசங்கள் செய்யவல்ல ஸத்புருஷர்களைக் கொண்டு சேர்த்து வைத்துக்கொள்ளவில்லையா? ஸத்துக்கள் இருந்தும் அவர்களை நீ அநுவர்த்திக்கவில்லை போலும். உனக்குள்ள விபரீதபுத்தி இதை நன்றாகக் கோட் சொல்லித் தருகின்றதே. ராவணா! நீ இவ்விலங்கையில் சுகமாக வாழ விரும்புவாயாயின், பயங்கரமான சாவை விரும்பாதிருப்பாயாயின் இராமனை நண்பனாகச் செய்துகொள்; அவர் தம்மிடம் உறவு கொண்டாடி வருபவர்களை ஒருபோதும் கெடுக்கமாட்டார். நானும் உனக்காக அவரை வேண்டி உன் பிழையைப் பொறுத்தருளும்படி செய்வேன். ராக்ஷஸாதமா! ஜனஸ்தானத்திலுள்ள அரக்கரனைவரும் இராமனால் மாண்டொழிந்ததை யறிந்து நீ அவரோடு எதிர்நின்று போர்புரிய வல்லமையற்றுப் பல வஞ்சகங்கள் செய்தனை; சார்ங்கமென்னும் வில்லாண்ட அவருடைய வில் நாணொலியை விரைவில் கேட்பாய்! இராமனாகிற கருடன் ராக்ஷஸ ஸர்ப்பங்களை அவலீலையாகக் கவர்ந்து கொல்ல வல்லவன். புலிகளினெதிரே புல்லிய நாய் நிற்கமாட்டாதவாறுபோல, அவ்விராம லக்ஷ்மணர்களின் முன்னிலையில் நீ நிற்கவும் மாட்டாதவன். இராம பாணங்களுக்கு இலக்காகித் தொலையவேண்டுவதுதான் உனது தலைவிதிபோலும் [இத்யாதிகள் ஸீதாபிராட்டியின் உபதேசமொழிகள்.]

4. பிராட்டியின் உபதேசத்திற்குப் பிறகு மாருதியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. ராக்ஷஸேச்வரா! உனது நண்பனான சுக்ரீவன் உனக்குச் சொல்லியனுப்பிய இத வசனங்கள் பலவுண்டு. நானுமுரைக்கிறேன் கேளாய்! வாயுதேவனின் புதல்வனாய் அனுமனென்பவனான நான் சீதைக்காக நூறு யோசனை விஸ்தாரமுடைய கடலைக் கடந்து இவ்விடம் வந்திருக்கிறேன். தவவொழுக்கங்களிற் சிறந்து நீதி சாஸ்திரங்களையுமுணர்ந்து கீர்த்திபெற்று விளங்குகின்ற நீ நன்று செய்தாயல்லை. உன்னைப்போன்ற புத்திசாலிகள் செய்ய முயற்சிகொள்ளமாட்டாத காரியத்தைச் செய்தாயே. ஸ்ரீ ராமலக்ஷ்மணர்கள் சீறிச் சிவந்து நிற்பர்களேல் அவர்கள் தொடுக்கும் அம்புகளின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலும், அசுரர்களிலும், மற்றுள்ளார்களிலும் எவனுமில்லையென்று உணருவாயாக. ராவணா! இராமனுக்குக் கெடுதிசெய்து சுகம்பெற விரும்புவாருமுளரோ? இராமனிடம் நீ கொண்ட பகையை விட்டிட்டாயாகில் உனக்கு நல்லகாலமுண்டு. இல்லையேல் குலத்தோடும் விநாசமடைவாய். இராமனைச் சாமானிய மனிதனென்று நினையாதேகொள்; உன்னைப் படாத பாடும் படுத்தின வாலியை ஒரே பாணத்தினால் முடித்திட்டவனென்று கேட்டிலையோ? நான் ராம பக்ஷபாதத்தினால் சொல்லுபவனல்லேன்; நடுநிலைமை வாய்ந்து உனது ஹிதத்தைக் கோரிச் சொல்லுகிறேனிவ்வளவும். ராவணா! தேவேந்திரனாயினும், முப்புரங்களை யெரித்த முக்கண்ணனாயினும் அவனது தந்தையான பிரமதேவனேயாயினும், இவர்களனைவரும் ஒன்று கூடியாயினும் இராமனுக்குச் சிறிதளவும் தீங்கிழைக்க முடியாதுகாண்; இராமன் எவனை நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவனை அநுக்ரஹிக்க ஒருவனுமாகாது. இத்யாதிகள் அனுமனால் கிடைத்த உபதேச நன்மொழிகள்.

5. இதற்குப் பிறகு விபீஷணாழ்வானால் இராவணனுக்குக் கிடைத்த வுபதேசங்கள் அளவு கடந்தவை. அவை ஒரு தடவையல்ல. பலகடவை கிடைத்திருக்கின்றன. "இராமன் மஹா பராக்ரமசாலி; தருமமூர்த்தி; அவனோடு வீண் விரோதம் நமக்குத் தகாது; அவனிடம் அபசார க்ஷாமணம் செய்துகொண்டால் நாம் நாசமடையாமல் நெடுங்காலம் வாழலாம். எவ்வளவு ஆலோசித்தாலும் நமக்குத் தோல்வியேயொழிய வெற்றியுண்டாக இடமேயில்லை. நம்முடைய ராக்ஷச வீரர்களான மந்திரிகள் உன்னுடைய முகமலர்ச்சிக்காக ஏதோ அஸம்பத்தங்களைப் பேசி உன்னை மயக்குகின்றனர். உனக்கு நேரவிருக்கும் கஷ்ட நிஷ்டூரங்களை நன்கறிந்து நான் உனக்குரைக்கும் இதமொழிகள் அந்தோ! உன் செவியிற் புகவில்லையே. இம்மூவுலகிலும் எங்குச் சென்றாலும் விடாது தொடர்ந்து கொல்லக்கூடிய ராமபாணங்கள் இலங்கையிற் புகாவண்ணம் தடை செய்யக்கூடிய நல்லுபாயத்தை எவ்வளவு உரைத்தும் கேட்கமாட்டேனென்கிறாயே. ராவணா! நீண்ட உடலும் கொடிய விஷமுமுள்ள ராம த்வேஷமென்கிற ஓர் பெரிய ஸர்ப்பம் உன்னைச் சுற்றிக்கொண்டு கிடக்கிறது. ராவணா! நான் உனது மேன்மையை விரும்பி நன்றாக ஆலோசித்து உனக்கு நன்மை பயக்கக்கூடிய இதவசனங்களைக் கூறியும் எள்ளளவும் உனக்குப் பயன்படவில்லை. ராம பாணங்களால் உனக்கு நேரப்போகிற அனர்த்தங்களை நன்கறிந்து சகிக்க முடியாமல் இவ்வளவுமுரைத்தேன். (இத்யாதிகள்)

6. பிறகு சுகஸாரணர்களின் உபதேசமும் இராவணனுக்குக் கிடைத்திருக்கின்றது. இவர்கள் ராவணனாலேயே அனுப்பப்பட்டு ராம சேனைகளை வந்து பார்த்து வியப்படைந்து அவனிடம் மீண்டு சென்று கூறுகின்றனர்; ராவணா! ராமனது உருவத்தையும் படைகளையும் பார்க்கில் அவனொருவனே இலங்கை முழுவதையும் நாசஞ்செய்ய வல்லவனென்று திண்ணமாகத் தோன்றுகின்றது. தேவர்களாலும் அசுரர்களாலும், அல்லது ஒன்றுசேர்ந்த தேவாசுரர்களாலும் ராம லக்ஷ்மணர்களை எதிர்க்க முடியாது. அவர்களை வென்றுவிடலாமென நீ நினைப்பது வீணான நசையே. அவர்களோடு நீ விரோதம் வைத்துக்கொண்டது போதும்; வீண் கோபத்தை அடக்கிக்கொண்டு க்ஷமை வேண்டுவதொன்றே தக்கது. (இத்யாதிகள்)

7. சுகஸாரணர்களின் உபதேசத்திற்குப் பிறகு ராவணனுக்குத் தன் தாயான கைகஸியும் அவித்தனென்னும் பெருங் கிழவனான மந்திரியும் உபதேசம் செய்ததாகத் தெரிய

